குருதுணை

மருதாசலக்கடவுள்

அலங்காரம் யமகவந்தாதி

சந்தப்பதிகம்

வேற்றெய்வமாலை மயிற்பதிகம் வாழாப்பதிகம்

கணபதி

விநாயகர் திருப்புகழ் யமகவந்தாதி

வேணுகோபாலசுவாமி சந்தப்பதிகம்

இவை

ஸ்ரீமத் இராமானந்த சுவாமிகள்மாணாக்கர்

சிரவணபுரம் கௌமாரமடாலயம்

# ஸ்ரீமத் கந்தசாமிசுவாமிகளால்

இயற்றி

கணபதி

க. சி. ஓதியப்பக்கவுண்டர் பொருளுதவிகொண்டு

சிரவணபுரம்

கௌமாரசபையாரால் அச்சிடப்பெற்றன

பிரபவ௵

1927

குச் சரீரமுறையில் பெரிய தந்தையாராயும் ஆன்ம ஒழுக்க நிலைமையில் உரிய தந்தையான சற்குரு மூர்த்தியுமாவரென்று பூர்வ தவவிசேடத்தாலுணர்ந்து, அங்கடைந்து மந்திரோப தேசமும், நியானமார்க்கபரிபாலன அநுபூதிகளும், அரிய பரம வுத்தமநூலாராய்ச்சியும், அரும் பெருந்திறத்தினவான கவிகளை யெளிதிற் பலபட விரைந்தியற்றும் வல்லமையும், தவத் திருவேடப் பொலிவும், ஒருங்கு அமைந்து அதி விசேடத் தன்மை வாய்ந்துள்ள சதுர்வேத சித்தாந்த சண்மத சமயாதீத அத்துவித கௌமாரசபையில் வந்து கூடி-அன்புக் கடலி னமிர்தபக்ஷணிகளாய் - அருட்குருநாதன் அடியவர் கருதிப்-பொருட்குவை மாதர் புவி மனை மைந்தர்-மருட்குறியனவென வாஞ்சையற்றுண்மைத்-தெருட்குணமான சிகாமணியான, கௌமாரத் தொண்டர்களுக்குச் சக்கிரவாளந் தோறும், நடுநாயகமாய் விளங்கி அரிய வுபந்நியாச வுபதேசம் புரியும் குருத்துவமும் பெற்றுச் சிவபோதச் செருக்கின்றி அன்பினால், குருபரனருளைக் குறிக்கொண்டிலகும் ஸ்ரீமத் கந்தசாமிசுவாமிகளாவர். இவரது சரித்திர விவரம், இயற்றிய நூல்களின் விவரம், முதலிய விஷயங்கள் இங்கு விரிக்கிற்பெருகும். வேறு சில நூல்களின் முகவுரை பாயிரங்களில் விளங்குவனவாம்.

இப்புத்தகத்திலமைந்துள்ள நூல்களை மேற்கண்ட கௌமாரசபை யடியவரிலொருவரும், ஸ்ரீமத் கந்தசாமி

சுவாமிகளது மாணாக்கர்களிலொருவரும், கோயமுத்தூர்த் கதித்தவைப்புக் கணபதியென்னுங் கிராமத்தில் செல்வத்திலும் அன்பிலும் உதார குணத்திலுஞ் சிறந்து விளங்குபவரும், சின்னப்பக் கவுண்டரென்பவரது புதல்வரும் ஆகி, பக்தி விநய வர்த்தகம் நடாத்தி விளங்கும் ம-ள-ள-ஸ்ரீ க. சி. ஒத்தியப்பக் கவுண்டரென்னும் பிரபுவவர்கள், விருப்புடன் வேண்டி விடைதரப் பெற்றுக், கருத்துடைமையுடன் கைப்பொருளுதவுதல், அச்சிற்பதிப்பித் தரியபுத்தகமாய், வெளியிடப் பரோபகாரஞ் செய்து, விளங்குகின்றனர். அவருக்கேற்ற நலபோக பாக்கியங்களும் ஞானமோட்சங்களும் காலக்கிரமத்தில், பரமகுருநாதன் பாலித்தருள்வாராக சுபம்.

பிரமோதூத கார்த்திகைமீ, } இங்ஙனம்

**வை. சுந்தர ஐயர்.**
கேசரி அச்சுக்கூடம்,
150. அண்ணாபிள்ளை தெரு, சென்னை.

குருபாதமேகதி

---

குருவே துணை




ஸ்ரீமத் கந்தசாமிசுவாமிகள்

கௌமாரமடாலயம், சிரவணபுரம்.

உ

குருவே துணை

# சா த் து க வி க ள்

---

## சிரவணபுரம் கௌமாரமடாலயம்

## ஸ்ரீமத் சுந்தர சுவாமிகள் இயற்றியன

### எழுசீர்விருத்தங்கள்

மருதபங்கிமென் றுளபடிபொருக்கால் வாய்கொடு
சொற்றவர்தமக்குந், திரிவுசெய்பவமும் போக்கிநற்பொலி
வார் சிற்சுகவாரியுட் டோய்க்கும், பெருமைபார்த்தருமப் பிறங்
கலென்முன்னூல் பேசுமிப்பனுவல்சொற்றிட்டோ னருமை
பார்தனதொல்லொருகவிகளினு மறைதருபுண்ணியமாவோ.

'மலிதருகலியு முளநீங்கிடவே மகத்துவமிகுத்துநல்
வளஞ்சா, லொளிதருநீர்த்தமூழ்கினாருந்தி யுற்றவருட்பிணி
நீக்கிச், சொலிதருஞானத் தெளிவுந்தந்திடுசீர் சொற்றிட
லென்னெவர்தேறார், கலிதருகழற்காற் சேந்தனின்றருநிங்
காரணமுடையதுமாதோ. உ)

அந்தநாடனை முனைந்தும்வேண் முன்னு ளசுரர்மேவந்த பொருந்தழியக், கைத்தனிவேலா லிருபிளவாகக் கண்டுதன் கழலெருபூதேந்தி, நத்திடுதேவர் விண்குடியேற நாட்டிய கருணையங்கடலின், மெத்தியபெருமை யெனதளவினவோ வினதகர் தமக்குமற்றுனால். (௩)

அன்னவன்புயத்திற் கலியலங்கார மரிவருப்பமக வந்தாதி. சொன்னயமிகச்சேர் திருப்புகழ்ப்பதிகஞ் சொற் றருமன்றி முன்னவனு, மன்னிநிகளைய திக்கொரந்தாதி மாக நாட்டினர்க்கமுதளித்த, பொன்னவனுநம் வேறுகோபாலை புலசந்தப் பதிகமும்புகன்று. (௪)

பாப்பெறும்பேறு பெற்றனனம்ம நண்ணிடுஞ்சரியா கைகொண், மாப்பெருங்குணஞ்சால் பிரமசரியத்தோன் மலிபுகழெழுங்குருபாணைத், தோப்பனென்றேது முறையினி லிதித்தோன் சுத்தாநியாசமும்பெற்றுக், காப்பெனவொ ழுக்க நெறியினிற்றிறம்பான் கழறியநால்பலமன்றே. (௫)

## வேறு

தக்க தத்தன தனதனதனனந் தனதானனு

சுந்தநித்திய சொருபாமெதனவுஞ்
சத்துவத்தவ ருளமுள தெனவுஞ்
சொற்றிடற்கரு கலைபலவினமுஞ் சொலும்வாய்மைசேர்

சத்தியுற்றது பெருவெளியதினின்
றெய்தினேத்திடுபடியவருயவந்
தற்குருப்படி யமைதொடைமையுமுன் பொருநாளிலே
யெத்தியுற்றொரு தனதருண்மிமைகொண்
டறபுதத்திரு வருள்வலியினதென்
றிட்டமொத்திட நயமொடுமொழிநங் குருநாதனார்
பத்தியுற்றிடு மடியவர்பலருஞ்
சித்தமொத்துள நெகிழ்வுறும்வகைதம்
பத்திநிச்சய வகைகளைமருள்கண் டிதமாகவே. (௫)

தத்த தந்தன தானதனதனனந் தனதானனா

அத்தியற்புத கவிகொடுபகரும்
புத்திமிகவ னடியவர்தமைவந்
தற்பொடுற்றதனருண்மொழியதுகொண் டிசைவாகவே
யுத்தியுற்றிடு சுருதிகள்பலவின்
டச்சமற்றிட வநுபவமதுவந்
தொக்கநத்திடு மடியவருளமுந் தெளிவாகவே
சித்தியைத்தரு வழிமுறைகளோடன்
றற்றபக்குவ ரறிதரநிதமுஞ்
சிற்பரத்தின தநிரகசியமும் பகர்நாவலோன்
றத்துவத்தினை யடியுடனறவுங்
கைத்துமெய்ப்பொரு ணிலைதெரிதரவுந்
தக்கசொற்றிடு திறலினையுடையன் றாமேலதே. (௭)

தந்த தானதன தத்ததன தானன

விந்தையார்தருக வித்தொகைக ளிடவே
விண்டபாவலர்கண் மெச்சுதிறல் வாய்மையான்
முந்தமாதவமு டித்தபெரு நேர்மையான்
மொய்ம்பொடேயவிர்க வித்தொடைகள் சாலவே
சந்தமோடுபகர் சத்தியகு ணவுளான்
சண்டன்மாறனய னொப்பகைகொண் மேதையான்
கந்தபாதனனொர் கைக்கிளிய னினமேமோர்
கந்தசாமிகரு ணைக்கடல னனரோ. (அ)

வேறு

ஆதியருளான்மனிதப் பிறவியினையெடுத்துமிக வல்லனே மேய, மேதினியிற்செல்வனெனத் திரிதரக்கண்டேன் பல ரை வீண்வீண்வினை, போதியநூல்களின்முறையே போதி யப்பினனவொருவ னுண்டென்றிந்த, மேதினியோருள்ள ளவும் புகழ்விளங்கப்பொருளளித்தான்விவேகத்தாலே. (௯)

அலகிலவாம்பொருள்படைத்து நல்வழியிற்செலவிடுமா றறியாரெல்லா, முலகிடத்திலேன்பிறந்தார் புவிச்சுமையாய்த் திரிந்தியம னூர்போய்மீண்டு, புவிகரடியாதியவாய்ப் பிறந்து மடிந்துழல்வதன்றிப் புகழேதந்தோ, கலைபுணர்பாவலர்க்க ளிக்கி லெந்நாளும் புகழ்படைத்துக் களினலாமே. (௧௦)

ஆதியருளான்மனிதப் பிறவியிடைப்பிறந்தவர்க ளடை
யவேண்டு,நீதியின்னமதெனத்தேர்ந்தோ ரோதியப்பனெனும்
பெயரோ னிகரில்லாவிப், போதியநூலச்சிடமா பொருளளித்
துக்கொளரதையாம் புகழுங்கொண்டு, மீதியலும்பரகதிக்கும்
பாத்திரனானது நலத்துண் மேலாமன்றே. (கக)



சிரவணபுரம் கௌமார மடாலயம்

## ஸ்ரீ இராமசாமி சுவாமிகள் இயற்றியன

### அறுசீர்விருத்தங்கள்

என்னையு மடிமைகொண்ட வெழிற்குரு விராமானந்தன்
றன்னகமகிழுஞ்சேயாத் தழை கந்தசாமித்தூயன்
மின்னனு ராசையாதி வெறுத்திடும் விவேகமிக்கோ
னென்னனுர் தம்மின்மேலாயிலங்குமெய்த்தகுதிவாய்ந்தோன்

எண்டிசை யோரும்போற்று மெழின்மரு தாசலத்திற்
றொண்டர்கட் கருளியென்றிற் றுலங்கிசைக் கந்தவேண்மேல்
விண்டணி யமகஞ்சந்தம் வியனலங் காரமாதி
கொண்டுதோத்திரிப்போரின்பக் குளிர்கடற்படிவார்மாதோ.



சிரவணபுரம் கௌமாரமடாலயம்

## ஸ்ரீ சபாபதி ஐயா அவர்கள் இயற்றியது

கட்டளைக்கலித்துறை

தன்னைக் கருணை பிரமானந்தப்பெயர்ச் சற்குரவ
னன்னையமாக்கந் தசாமிமருத நகத்தமர்சே
யென்னைர்பகரு நூற் றலங்காரஞ்சந்தம் யமகமய
பென்னைப்படிப்பவர்க் கன்பும்புலமையு மீந்திடுமே.

---

சிரவணபுரம் கௌமாரமடாலயம்

## ஸ்ரீ சின்னசாமி சுவாமிகள் இயற்றியது

இரட்டையாசிரியவிருத்தம்

படிமிசையி னுண்மைப் பரந்தெரிந்திலவான
பக்தவர்க்கோர் புகலியான்
பதுமப்பதத்திற் பதித்துற்ற சிந்தையும்
பாவாணர்களும் வியப்பக்
கடிமலர்க்கொளி நமாதர் கருணைப்பெருக்கமுங்
கறையற்ற தவசீலமுங்
கங்குற்கொரியமனுக் காணுற்றபேரறிஞர்
கணமுட்கலந்ததான
படிவுற்றிடாதசுக வாரியாய்ப்பொருவிலா
மௌனப்பெரும்போகமும்

வாய்கவெனயாமருத வெற்பிலுறை குமானன்
மறக்கொடிதனக்குவடுமீதாய்
பொடியுற்றபுயமீதி லணிமாலை வல்லவர்கள்
போற்றும் பெரும்பேறதாய்ப்
புரையற்றகந்தசா மிப்பெயர்பெறுந்தவப்
புனிதன்புன்றனையரோ.

---

சிரவணபுரம் கௌமாரமடாலயம்

## ஸ்ரீ இரங்கமுத்து ஐயா அவர்கள் இயற்றியன

### எண்சீர்விருத்தங்கள்

உலகமெலா மின்பமுறத் திருவுருக்கொண் டருளு
முத்தமரா மானந்த வுயர்ந்தகுரு மணிக்கு
விலகருமெய் யன்பதனுற் றிரிகரணத் தாலும்
விருப்பமுடன் பணிபுரியு மேன்மையத னாலே
யலகறுவே தாகமங்க ளறைபொருளன் கறிந்தே
யறிவுதனை துருவெனக்கொண் டன்பர் பெர்சுமாறா
யிலகுதிருப் புகழ்வண்ணம் யமகமுதற் கவிக
ளினிதுபுகன் றிடுகந்த சாமிதவசீலன். (௧)

திருமலைக வெவுற்றுநடஞ் செப்பரம குரவன்
றிருவுருவா கியமருதா சிலம்பினிடை யென்னோர்
தருமலைவார் தேர்தரத்தன் டணிக்குதிகழ் வான்மேற்
றங்கசுவைத் திருப்புகழோ டலங்காரம் யமக

மருமலர்சேர் புயத்தணிந்தான் பிறவியெனும் பிணிக்கோர்
 மாமருந்தாய் விளங்குகவி மாலைகளி னருமை
விருகமெனத் திரிகின்ற வீணரறி வரிதே
 வித்தகர்தஞ் செவிவாயார் விருந்தனைய வாமே. (௨)

---

## சிரவணபுரம் கௌமார மடாலயம்

## ஸ்ரீ கிருஷ்ணசாமி ஐயா இயற்றியன

### அறுசீர்விருத்தங்கள்

தண்டமும் வேலுந்தாங்குந் தகவுடைக் குருவாவந்தோன்
றொண்டர்சூ ழிராமானந்த நாயகற் குருதாள்போற்றித்
தண்டமிழ்ப் புலமைவாய்ந்த தலைக் கந்தசாமிமேலோன்
விண்டமை மருதவெற்பின் மிளிர்குமரேசன்மீது. (௧)

மிக்கதா மலங்காரஞ்சேர் வியன்சந்தம் யமகச்சிலேட
புக்கவந் தாதிசாற்றிப் புனைந்தனன் றொண்டிற்சிறந்துப்
பொக்கமின் மனத்தரியாரும் புந்திகொண் டுவந்துபோற்றி
விக்கினே முதலோர்செப்பு மிடாகன் றுய்யமாசேதா. (௨)

---

சிரவணபுரம் கௌமாரசபை அடியவர்களிலொருவரான

## ஸ்ரீ கண்ணப்ப சுவாமிகளியற்றியது.

தனனத் தனத்ததந்த தனனத்தனத்த தந்த
தனதத்ததந்ததான தனதானனு

குருபத்தியிற்பொதிந்த தகுபுத்தி யிற்சிறந்த
குணமுற்று கந்தசாமி தவிரிலணீங்
மருதப்பொ ருப்பமர்ந்த குகனற்க டப்பலங்கல்
மடிமைச்சு கந்துலாவு புயமேலவே
யருளிற்செ ணித்துவந்த யமகத்தொ டொப்பகன்ற
வணிமிக்க சந்தமாலை யரிதானவே
யிருளிற்கு ளித்தவஞ்ச விதயக்க சட்டரஞ்ச
விழைசொற்ற புந்திநாளு மிகவாழியே.

---

சிரவணபுரம் கௌமாரசபை அடியவர்களிலொருவரான

## ம-ள-ள-ஸ்ரீ இராமசாமி செட்டியார் இயற்றியது

அறுசீர்விருத்தம்

சிரவணமாபுரத்திலியற் கௌமாரர் பணிந்தேத்துந் தேசிகேசன்
சரணகமலத்தினிடை பதிந்தமனம் பெறுகந்த சாமித்தோன்றல்
சரவணமா மருதவரைக் குகற்கணியு மலங்காரம் யமகஞ்சந்த
மரவணைக்கண் டுயின்மாயன் மருமகனோர் புலவர்மதித்தறைவவாமால்.

செட்டியார் குமாரர்

## சிரஞ்சீவி சின்னப்ப செட்டியார் இயற்றியது

### எண்சீர்விருத்தம்

திருமகளு நாமகளும் பொருந்திவாழுந்
செழுமலர்ப்பூந் தடம்பொழிலின் சிறப்போ டுண்மை
பருண்மணஞ்சால் சிவணைமா புரத்தினூடே
யன்புடைமெய்க் குமாரர் பணிந்து போற்றுங்
தருபரன்றன் பரவுகந்த ராமப் பேர்தோய்
குணக்குன்றோன் மருதவணைக் குகநாதற்குப்
பொருளில்யா கந்தசந்த மலங்கா ரப்பாப்
புனைந்தபெருந் திறற்பெரியோர் புகல்வதாமே.

---

இலக்ஷ்மி நாயகபுரம்

## சாமையங்கார் அவர்களியற்றியது

### இரட்டையாசிரியவிருத்தம்

பூடகண்முகமென்ன யாம்புகழ்சிரவணப்
புரன்வரத்துறவறத்தோர்
போற்றுகந்தச்சாமி சாற்றுசந்தப்பாவின்
பொன்சரபரன்பர்சாமி

மாமகிழ்மருதகிரி யாண்டவரலங்கார
மணியமக வந்தாதியு
மற்றுந்திருப்புகழ் பத்தும்பிரண்டுடன்
மன்னுகண பதிகணேசர்
நாமகளுநாடுந் திருப்புகழ்யமகவந்
தாதியும் வேறுகாணர்
நயரந்தமாம்பதிக முயனிந்தையாபதிக
ஞானபூதியர்களான
நாமிகளின்மனமலர்ந் தாமிகைத்தேந்தனிகந
நாவமுடிசெ னப்பாடினோர்
ஞாலமெல்லாமோத பிலவல்லார்ந்தாத
நாவலர்க் கரியர்மாதோ.

முற்றிற்று

# குருபாதமேகதி

---

# சிறப்புக்கவிகள்

திருப்பேரூர் ஸ்ரீமத் சாந்தலிங்கசுவாமிகள் மடாலயம்
சத்வித்யாசன்மார்க்க சங்கத்தின் அமைச்சர்
கோயமுத்தூர் விளாங்குறிச்சி
வி. நா. மருதாசலக்கவுண்டரவர்க ளியற்றியன

## வெண்பா

கணபதியூர்த் தெய்வக் களிற்றினியற் பாட்டென்
குணபதியூர் கார்மருதக் குன்றேறன்—குணமிசைத்தா
ளுமகணே டார்புரியு நாவலனு கந்தகந்த
சாமி சுவாமி சபாஷ்.

## கட்டளைக்கலித்துறை

ஏத்தவைத நூலார்க் கணபதித் தேவை கணபதிகாட்
டூவில்யபகமு மாமருதாசலன் பொற்சிலம்பி
லாவல்வளர்க் குந் திருப்புகழாதி யலங்கலிட்டான்
காவலர்பூஞ்சிர மைக்கந்தசாமிக் கனதவனே.

## சந்தவிருத்தம்

தந்ததன் னத்தனன தந்தன தத்தான தந்ததான
சந்தவண்ணச் சரப குண்டபாணிச்சாமி தந்தராமா
னந்தர் தின்னைத் தவசு மைந்தனுநற் பேறு கந்தசாமீ
தந்திவண்ணற்கு முறை தம்பி பேரிற்பாடு கின்றபாவா
லிந்தமண்ணுக்கு முய்ய சந்தவானுக்காகு மின்பவாழ்வே.

குருவே துணை

# சிறப்புக்கவிகள்

திருவாமாத்தூர்க் கௌமாரமடாலயம்

ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் குமாரர்

## தி. மு. செந்திநயகப் பிள்ளையவர்க ளியற்றியன.

### அறுசீர்விருத்தங்கள்

தண்பொலிபூம் பொழில்புடைசூழ் சிரவணமா புரத்தி
னிடை தவநதோர் வாழ்வா, யொண்பொலிகௌ மாரமடா
லயக்கனக சபையிலுய நுண்மைஞான, வண்பொலிரா
மானந்த தேசிகன்றன் றிருக்கணருள் வாரிதோய்ந்தே,
பண்பொலிசெந் தமிழ்ப்புலவர் திலகமெனக் கவிமழைபெய்
பைங்கார்போல்வான். (க)

கண்டவர்கண் களிப்பநிகழ் திருவேடப் பொலிவுமிரு
காதினுளுட், கொண்டவர்தன் பகற்றுமுய ருபதேச சார
மொழி கூறுஞ்சீரும், விண்டவர்சொற் கடங்காவுத் தம
வொழுக்கந் தொகுதியுங்கொள் விவேகமேயோன், றிருண்
டார்பதத் தூள்சுமக்குங் கந்தசாமித்திருப்பேர்த் தோன்ற
லானேன். (உ)

மாதவர்போற் றம்பெருமை மருதமலைக் குமரனிரு
வனசத்தாளிற், சீதமலர்க் கடம்புகுரா வெட்சியென வலங்
காரத் திருவார் சீர்நூல், பேதமிலா வடியெதுகை பொருட்

பேதஞ் செறியமகப் பேரந்தாதி, யோகநுந்தரந் தப்பதிகம் புகன்றவேற் றெய்வவிணை யுரைக்குமாலே. (௮)

பிறப்பதிகம் புகன்றகுரு நாதியாம்வா மாப்பதிகா வழுத்தியன்பர், சொரிந்திதாகைதிக் கணபதியுக் கனைநர் சந்தக் கவியமகத் திருவந்தாதி, தமிழ்க்குறிப்பாய்த் தாண்டபக வினைப்புரந்து நெஞ்சினிடை நினைகாடன்ப, நமிழ்க்குமரா வேணுகோபாலர் திருப் புகழ்ப்பதிக முரைத்தானன்பால்.

அப்பனுவற் றிரளெதி லன்பினர்பற் பல புணர்த் தறைந்து போற்றி, யெப்பயனு மினிதடைந்து முத்தியுறச் செய்வதுநன் றெனவுட்கொடிச், செப்பமுற வவனுரைபெறு அரியதன்கைப் பொருள்கொடுப் பீராசச்சிற், றப்பறப்புத் தகமாகப் பதித்துதவிப் பெரிய பயன் சார்ந்தானன்றோ.

ஆதியப்ப னெனசிவன் றிருவுளத்தைச் சாமைமிந்நேரச் சிற்காட்டு, நீதியப்ப னெனகணபதிப்பெருமான் மெய்யாப் பதியி னிலையுமாண்பாற், பூதியப்ப னெனகுருபரன்பதத்தி லன்புறுதி பொருந்தப்பெற்றோ, யோகிப்ப னெனதிறலோதியப்ப னுதாரகுணத் துசிதன்மாதோ. (௯)

மனுநகரக் குறிகைக் கொண்டதண்ட பாணிதர வநுங் கன்பாகிக், கவுமார நிச்சயங்கொ ளிராமாநந் தப்பெரி யோன் கருணைதன்னுற், சவுபானக் கிரியை முயல் சுந்தரப் பேர்வேதியன்மெய் தழைத்தமேலோ, னெவுலோகத் தெருப் புகழ்தன் கேசரியச் சியந்திரத்தை நியற்றினனே. (௰)

முற்றிற்று

# குருபாதமேகதி

உ

குருவே துணை

# அலங்கார

காப்பு

கட்டளைக் கலித்துறை

சிலங்காரணைய குபூண்மீகளியுந் திருவே
குலங்காரணைய மயில்போனடனங் குயில்
வலங்காரகன் புகழ்க் கீதத்துமருந்த
னலங்காரகல்கு மிராமானகதன்பொன்

நூல்

கட்டளைக் கலித்துறைகள்

நேசத்துவந்து தினம்பேணுமன்பினர் நெஞ்சகத்தே
பாசத்துவந்துவஞ் சேராமலாண்டிடும் பண்பினவான்
மாசற்றுவப்பெரி யோரேத்துஞ்சீர்கொண் மருதவெற்பில்
வாசத்துளவன் மருகோன்றிருவடி வாரிசமே. (க)

பாடிடுமன்பர்க்கின் பீந்திடுநின்பத பங்கயங்கள்
கூடிடுமொப்பில் பரானந்தவின்பங் குவலயத்தி
லாடிடு மங்கையர் பொய்ச்சுகம்வாஞ்சித் தொழிவிலிடு
காடிடுமாக்கை படைத்தேதங் துமானிடர் காண்பரிதே. (௭)

சழக்குண்டவஞ்சக் கொடுமாயையின்வன் றளையிடைப்பட்
டிழக்குண்டயரு மடியேனுக்குன் றுபயநெஞ்சிற்
பழக்குண்டதொண்டர் பெறும்பேறநுளர்சம் பந்தமிக்க
வழக்குண்டுனக்கின் றெனிலெனக்குண்டு மருதையனே. (௮)

கண்டமட்டுங்கறுத் தார்குருநாதனைக் கார்முகிலிற்
கொண்டமட்டிங்கறுத் தோன்றுழமர்ச்சுனக் குன்றிடத்திற்
றண்டமட்டிம்புரி வாரையுங்கார்திறச் சண்டன்முனங்
கண்டமட்டுந்திறற் றீர்வான்பிரமன் கதிநிலைத்தே. (௯)

அல்லாக்குஞ்சோலை யதனிடைபாம்பி னரதனங்க
ளெல்லாக்குஞ்சீர்கொண் மருதாசலனையுள் ளெண்ணிலுடன்
பல்லாக்குமைம்புலன் மல்லாக்கும்வஞ்ச மனவடிவா
யில்லாக்குமாயையை யில்லாக்குமானந்த மீந்திடுமே. (௧௦)

மருதாசலன்பொன் னடிகளையன்பின் மனத்திருத்தக்
கருதாதநித்தப் புவிவாழ்வைமெய்யெனக் கண்ணியென்றும்
விருதாவினிலுழல் வார்நரசென்மத்தின் மிக்கதுகாண்
வருதாரணிமிதித் தற்கஞ்சுபேய்ப்பெறும் வன்பிறப்பே. (௧௧)

வாளார்ந்தவஞ்சகக் கண்மடமாதர் வடிவினையே
கோளார்ந்த வென்மனத் தூடுநின் றுள்ளங் குளிர்தவமெய்த்
தாளார்ந்தகொண்ட ருவக்கொறுந்துன் னடிசார்தலுண்டோ
வேளார்ந்தவின்பிற் பணிமருதாசல வித்தகனே. (உஉ)

பகட்டேறிவந்தகட் டுங்கொடுங்கூற்றனும் பாவையர்த
மகட்டேறிடப்புரி மாரனும் வேதனு மான்றனைகயிற்
சகட்டேறிடுமரு தாசலன்றளன்றிச் சாற்றுமண்ட
முகட்டேறினுலும் விடார்மனமேசற்றுண் முன்னுதியே. (உங)

இந்தியத்தின்மனஞ் செல்லும்பொழுதி லிசைந்துளதாம்
புந்தியிற்கண்டரு சொற்பனமாமிப் புவிப்பொருளை
நந்திறவாழ்வென் றுமல்வீரறிவின்மெய்க் காடியன்பின்
புந்தியுட்டோய மருதாசலனை முன்னுமினே. (உச)

தன்னையொப்பாம்பு வேலாநின் றட்டினை தானினையா
தன்னையுந்தந்தையு முற்றுறென்றோர்கணக் தாயிரர்த்தோய்
மின்னையொத்தேகாடிடு பொன்னைத்தென்னவி வேகந்தனை
யென்னையென்றேறுநிடு வேன்மருதாசலத் தெய்ப்பிறையே. ()

ஊனுனெனச்சொற் றுழன்றதல்லாலுன தாண்மைபருண்
ஞானநுபூதி நிலையோர் சிறிது நயந்தறியேன்
மானுரகடு புகாமைக்கென்செய்வன் மலர்பொழியுந்
தேனார்தடம்பொலி சீர்மருதாசல சிற்பரனே. (உசு)

வேடம்புனைந்தெதிர் காண்போர்களுள்ளம் வெருளமெத்த
வாடம்பரஞ்செய் திடுவேனுன்பாத மடைவதுண்டோ
தோடம்பரந்திழி வேன்றலை மீதடி சூட்டிடுவாய்
நீடம்பரந்தொட் டிடுமருதாசல நின்மலனே. (௨௭)

மலையிடத்தாடல்செய் தின்றிருந்தாளென் மனமெனும்வன்
சிலையிடத்தாக வமைத்திடநீயுளஞ் செய்யினுட
னுலையிடத்தாமெழு கேபோன்றிடற்கைய மொன்றுளதோ
தலையிடத்தாமணி நாகங்குலாமரு தாசலனே. (௨௮)

போதென்றுவமை பொருந்துநின்பாதம் புகுந்தொண்டர்
கோதென்றுவிட்ட குணங்களெல்லாமொன்று கூடியென்பால்
வாதென்றுஞ்செய்ய மனந்தளர்வேனைநின் வாரிசத்தாண்
மீதென்றுகூட்ட நினைவாயருச்சுன வெற்பரசே (௨௯)

மாயையென்றென்றனை யல்லாதுண்டென்ன மதிக்கிலனுன்
சேயையிவ்வாறு செயலேனகலச் சினந்திடினுந்
தாயையல்லாவிளஞ் சேய்க்கிடம்வேறிச் சகத்திலுண்டோ
வேயையொப்பாமனத் தேற்கருளர்ச்சுன வேதண்டனே ()

காமன்றனதலர் வாளிக்கயர்ந்திளங் கன்னியரை
மாமன்றலாற்ற மதிக்குநெஞ்சொன்று வழுத்திடக்கே
ளேமன்றருதுய ரெல்லையில்லாதன வெண்ணியருட்
சேமந்தருமரு தாசலற்றேயின்பஞ் சித்திக்கவே. (௩௧)

உருவாழ்வுகொண்டிட வாரமுதான வுணவுகொள்ளுந்
தருவாழ்வுதானுமோர் வாழ்வன்றெனிவிச் சகவநித்தக்
கருவாழ்வுகண்டிறு மாத்தனன்றேவுட் கலந்தழியாப்
பெருவாழ்வுசீர்மரு தாசலன்றுளவை பேணுநெஞ்சே. (௬௨)

கிரவுஞ்சத்தாதிய வாமருதாசல வேலநின்றுள்
பரவுஞ்சத்தார்குண வீரர்கடாரகப் பாதகனைற்
கிரவுஞ்சத்தார்தரு பெற்றியுற்றேனெனைக் கிட்டுபுவாழ்
தரவுஞ்சத்தாள்பெற நல்குநின்செம்பொற் சரண்சரணே. ()

செய்வகைபொன்றறி யாதேயுலகச் சிறுநடையி
னைவகைமிக்குழன் றேன்மருதாசல நாயகயா
னுய்வகைகொள்ளநின் பாலடித்தேனரு ளூற்றுனைத்தோய்
மெய்வகையன்பரன் பீந்தாளுனைமிக வேண்டினனே. (௬௪)

அல்லும்பகலு மறியாவிடத்தி லமர்ந்தடியேன்
சொல்லும்பொருளுமற் றன்பதபங்கயந் தோய்சுகத்தி
லொல்லும்படியெற் கருளுந்தினமொன் றுளதுகொலோ
செல்லும்பரிதியுந் தோய்மருதாசல சிற்பரனே. (௬௫)

மனமென்றபாவி மயல்கொண்டுதீவினை மங்கையர்தந்
தனமென்றவெற்பி லிவர்ந்திழியல்குற் சலதிபுக்குக்
கனமென்றனந்தம் பிணிமழைபெய்பொய்க் கடங்கடக்குந்
தினமென்றென்றேனுஞ்சொல் வாய்மருதாசல சேவகனே. ()

வனங்காதலிக்குஞ் சடையானுங்கும்பனும் வாழ்த்துபுதம்
மனங்காதலிக்கு மருதேசன்பாத மறந்துவன்பே
யினங்காதலிக்கு மினமானமாதரோ டேதமிக்க
தனங்காலிக்கு மனமேயுனக்கென்ன சால்புடைத்தே. (௩௭)

தேனூறுமின்ப மருதாசலன்புகழ் செப்பெனவே
கானூறுகோடி தரமுனைப்போற்றி நவிலினும்விட்
டேனூறுடையபொய் வாழ்விலின் புண்டென்றுழன்றனையா
லேனூறுனைவிட் டகலுநெஞ்சேமதித் தெண்ணுதியே.(௩௮)

பவந்தோறுமென்மன மேயுன்வழியிற் படர்ந்தளவி
லவந்தோயுந்துன்புழந் தேன்பிறப்பொன்றிதி லாயினும்யா
னுவந்தோதுமாற்ற மதித்தன்பினோடென் னுடனிணங்கிச்
சிவந்தோயுமாமரு தாசலன்றாட்டுணை சேர்ந்துருகே. (௩௯)

பெருகும்பரசுகத் தேனல்குன்றாட்டுணை பேணியுள்ள
முருகுஞ்செயல்சற் றடையாதபாவி யொதியனையேன்
பொருகுஞ்சரநிகர் மெய்த்தொண்டர்பான்மை பொருந்தலுண்டோ
முருகுந்துதண்டலை சூழ்மருதாசல முன்னவனே. (௪0)

முன்னந்தரங்கக் கடற்றுண்டிச்சூரை முடித்திமையோர்
மன்னந்தரங்கவி னெய்தச்செய்தாளு மருதவெற்பா
யென்னந்தரங்க மறிந்துஞ்சிறிது மிரங்கிலர்போ
வின்னந்தரங்கம் பெறக்காண்டனின்னருட் கேற்பதன்றே.()

பழிக்கேபிறப்பிட மாமடமாதர்தம் பாலமுத
மொழிக்கேகலக விழிக்கேயிடையின் முடைகொளுந்திச்
சுழிக்கேவிருப்பம் பெறுவதல்லாற்சிற் சுகங்கொணின்றுள்
வழிக்கேவராமனத் தாலிளைத்தேன்மரு தாசலனே. (சஉ)

வகையொன்றுந்தேர்கில வாணவாதி மலங்களினுன்
மிகையொன்றும்வெம்பவத் தின்னன்மிக்கெய்த்தனன் வேதவருட்
சிகையொன்றுமின்பதஞ் சூட்டிமெய்த்தொண்டர்கொள் சீர்பெறவே
தகையொன்றுமாமரு தாசலசற்றெனைத் தாங்கிக்கொள்ளே.

வெப்பின்றியதண் விளக்காயெனதுள மேவியநின்
னொப்பின்றியதுணைத் தாளுடிச்சற்று முருகலின்றித்
துப்பின்றியவத் தலையுமென்னெஞ்சநின் றுண்டரொப்பாத்
தப்பின்றியநெறி தாங்கலெந்நாண்மரு தாசலனே. (சச)

காலத்தைவீணிற் கழித்ததல்லாலருட் காட்சிபெறுஞ்
சீலத்தையோர்சற் றறிகின்றிலேன்வெஞ் சினத்தொடிருட்
கோலத்தைமேவி வருநமனுக்கென் குயிற்றிடுவேன்
சாலத்தைநீக்கி யருண்மருதாசல தற்பரனே. (சரு)

சின்னஞ்சிறுபரு வத்தில்வந்தாண்டின்று தேர்கிலர்போற்
பென்னம்பெரிய துயருறக்கண்டும்பே சாதிருந்தாய்
கன்னங்கரிய நிறத்தந்தகன்கொளக் காட்டிவிடே
றன்னந்தனிப்பொரு ளேமருதாசல சண்முகனே. (சசா)

தருவாகிநின்றம ரர்க்குறுபோகந் தருதலிற்சற்
குருவாகிவந்தடி யேற்கருட்சிலங் கொடுத்துமின்னங்
கருவாகிடும்வழி யென்னெஞ்சமோடக் கறங்கிலெய்த்தே
னருவாகிவாழ வருண்மருதாசல வாண்டவனே. சஎ)

பண்டுண்டவொன்றினை நாளும்புதிதெனப் பற்றுமிஞ்சி
யுண்டுண்டலைமனத் தேனியருள்சற் றுதவினன்றித்
தொண்டுண்டமெய்யடி யார்போலநின்சிற் சுகக்கடலின்
மொண்டுண்டமையே னிசமருதாசல முத்திவித்தே. (சஅ)

உலைக்கண்ணிடுமெழு கேபோலநெஞ்ச முருகுனன்பர்
முலைக்கண்ணிற்பாற்பெரு வாரிதிதோன்று முறையிலின்ப
வலைக்கண்ணியைந்தனர் நானேமைவஞ்சக வைம்புலப்பொய்
வலைக்கண்ணிருந்துயர் கொண்டேன்மருத வரையரசே. (சகூ)

நானுடனீயென் றிடும்பேதமுற்று நசிக்கநறுந்
தேனுடன்பால்கலந் திட்டதுமொப்பின்மெய்ச் சிற்சுகத்தி
லூனுடனுள்ள முருகும்படிக்கென் றுதவியென்னை
மானுடப்பேறு பெறப்புரிவாய்மரு தாசலனே. (ரு0)

மீனென்றுமானென்றும் வேலென்றுங்கோலென்றும் வேடனம்பு
தானென்றுமாதர்கண் ணைப்புகழ்மோகந் தவிர்ந்தவனி
வானென்றுமேத்து மருதாசலேசநின் வண்புகழ்ச்சீர்
நானென்றுந்துத்தியஞ் செய்துய்யுமாறரு ணல்குவையே. ()

விடந்தீண்டிடுந்தகை போலெனைச்சற்றும் விடாதுமயற்
சடந்தீண்டிவாதனை தந்திடச்சாலத் தளர்ந்தனன்வா
ணிடந்தீண்டியமரு தாசலமீதி விலங்குனின்ப
நடந்தீண்டியபத நான்றீண்டவென்றருளல்குதலே. (௫௨)

வழியாதுமோர்கில ஞயாணவவன் மலத்தினுட்கண்
விழியாதழுஞ்சிறு சேய்போற்கிடந்து வெதும்புகின்றேன்
சுழியாதருளினுய் வேன்சோதிப்பானீ தொடங்கினுய்யேன்
பொழிவார்மதுப்பொழில் சூழ்மருதாசல புண்ணியனே.(௫௩)

புண்ணியர்யாருநின் பொன்னடிபோற்றிப் பொருவிலின்பாங்
கண்ணியமெய்திக் களிதூங்கினரிக் கடையவனேன்
மண்ணியல்வாழ்க்கையை மெய்யென்றுநாடி மதியிழந்து
புண்ணியன்மாயையி லாழ்ந்தேன்மருதப் பொருப்பிறையே.

அந்தோவிவ்வேழைச் சிறியேன்சகித்தற் கரியதுன்பா
னெந்தோலமிட்டாற் றும்பான்மைதன்னையுண் ணோக்கினிற்குச்
சந்தோடமேவுவ தோமேவிடிலதென் சம்மதங்காண்
பைந்தோகையாட லுறுமருதாசலப் பார்த்திபனே. (௫௫)

கவலைகள்யாவுங் கழிந்தேநின்செம்பொற் கழற்றுணையா
முவமையின்மெய்ச்சச்சி தானந்தவாரிதி யுண்டெழுந்து
நவரசப்பாடல்பல் கோடிபெய்தாட னவிற்றவென்னுட்
டவிழைந்தேன்மரு தாசலவாஞ்சை தருவதென்றே. (௫௬)

வார்க்குங்குமமுலை யாரநுராக வழியிலென்னை
யீர்க்குங்கொடுமனப்பேய்க்கோட்பட்டெய்க்குமெனின்னலறத்
தீர்க்கும்படியென்று நீநினைவாயுயர் சேணெட்டிப்
பார்க்குஞ்சிகரி குலாமருதாசலப் பார்த்திபனே. (௫௭)

திருந்துங்குணமலி மெய்த்தொண்டடியவர் சென்னிமிசை
பொருந்தும்பதமலர்க்கென்சென்னிசாலப்பொருத்தமின்றே
முருந்துந்தளவ வரும்பும்பொருங்கதிர் மூரல்வள்ளி
வருந்துன்படவி புகுமருதாசல வானவனே. (௫௮)

கீர்த்தியென்றாழ்மரு வென்னேனருணா கிரிப்பெயர்சான்
மூர்த்திபுகலுன் றிருப்புகழ்ப்பாக்கண் முதிருமன்பி
லார்த்தியிலோதித் துதிக்காதவத்தி லலையெனைக்கண்
பார்த்திடுதற்கிசை வாயோமருதப் பருப்பதனே. (௫௯)

பனையென்றுநீடுயர் பல்கோடிநல்குமிப் பார்நடையின்
மனையென்றுமைந்தரென் றுஞ்சுழன்றெய்க்குமென்வஞ்சநெஞ்ச
நினையென்றுமன்பி னினையென்றுசால நிகழ்த்தினும்யான்
றினையென்றுங்கொள்கில தேமருதாசல சிற்பரனே. (௬௦)

கண்டுண்டமாதிய கொண்டுநின்றுளிற் கலந்தவின்ப
மொண்டுண்டகிலச் சிறுநடைதோயு முயக்கறுமெய்த்
தொண்டுண்டபேரன் பினர்போலடியேன் றுலங்கிடுநா
ளுண்டுண்டுகொன்மரு தாசலவேலவ வோதுதியே. (௬௧)

வேதாகமமுடி மீதேமுடியில் விளங்குநின்பொற்
பாதாரவிந்தமல் லாதுனதாணையிப் பார்மிசையோ
ராதாரங்காண்கில னீதுன்னுளமறி யாச்செயலோ
மாதாபிதாகுரு வாமருதாசல வானவனே. (கூ௨)

மட்டாருநின்பொற் சரண்சரணென்று மதித்தவனை
யெட்டாதபேரின்ப ஞானநுபூதி யிசைத்தருளில்
விட்டாலுமல்லது மாபாவியென்றுள் வெறுத்திருளி
னுட்டாழவைக்கினும் பாரநிற்கர்ச்சுன வோங்கலனே. (கூ௩)

மயனிறைவுற்றபொய்ப் பார்மீதிற்றந்தை மரபமைந்தா
ரியனினைக்குன்றொறுஞ் சோதனைமீக் கியற்றிடினும்
வியனிலகுற்றெனோர் நெஞ்சத்துளோகை மிகுக்கின்றதால்
கயனிலவுஞ்சுனை யார்மருதாசல கந்தப்பனே. (கூ௪)

தேனெனநின்புக ழேபாடுமாசை செறிந்தவனை
யானெனக்கூவி யணையாமனெஞ்சத் தருளிலர்போ
லேனெடுஞ்சோதனை பல்வாறியற்றிபு ளெய்க்கவைத்தாய்
கானெழுந்தண்டலை சூழ்மருதாசல காங்கெயனே. (கூ௫)

பித்துலகத்தவர் தம்மையுற்றோரெனப் பெற்றவரோ
டொத்துழலுங்கொடு மாயப்பிணிமுற் றொழிந்தறவே
நத்துலவுங்கட லுண்டாற்கருண்மொழி நல்கிடுவாய்
சத்துமுன்முப்பொரு ளாமருதாசல சற்குருவே. (கூ௬)

எற்றுங்கொடும்புலக் கோட்பட்டியானீண் டிரங்குசெயன்
முற்றுந்தெரிந்து மிரங்காதிருத்தன் முறைமைகொல்லோ
வெற்றுன்பஃகின்றனை யல்லாலெடுப்பவர் யாரிசையாய்
விற்றுன் றுமண்டிலந் தோய்மருதாசல வித்தகனே. (௬௭)

மானிடரானவர் யாவருமர்ச்சுன வள்ளனின்றாள்
வானிடந்தோய்ந்திறப் பின்றியவானந்த மன்னினர்யா
னானிதிலாசை மிகுந்தேயுணர்வற் றுழன்றிடும்வெங்
கானிடத்தார்விலங் கொத்திழிந்தேன்கதி காண்பதென்றே.

மனங்கண்டகுற்றங்கள் பற்பலகோடி மலைகடல்போற்
றினங்கண்டபாவிக் கொடியேனென்றன்மெய்த் திருவுளத்திற்
சினங்கண்டனையெனி னாயேன்றனக்கொரு திக்குளதோ
கனங்கண்டவுஞ்சிகிமருதாசல கந்தப்பனே. (௬௯)

எப்படியாகினு நம்மைவிடானெந்தை யென்றுதின
மிப்படிமீதெதிர் கண்டோரிடத்து மிசைக்குமென்சொல்
பொய்ப்படியாகிடு மாறருளாது புறக்கணியேன்
முப்படியுந்தொழுஞ் சீர்மருதாசல முன்னவனே. (௭0)

வம்புந்துமைம்புல வேடர்களான்மிக மாழ்கிநொந்து
வெம்புந்தகையுடை யேனாயினுநின் விரைமலர்த்தா
ணம்புந்தகையு முடையேனெனைக்கை நழுவவிடேல்
கொம்புந்துதேன்கொட் டிடுமருதாசலக் கொற்றவனே. (௭௧)

வேண்டாதிகழ்ந்துரைக் குஞ்சமன்றன்பதி மேவநம்மைக்
கூண்டாரொடும்வந் தழைக்குமக்காலுளக் கோயில்கொண்ட
வாண்டான்மருதப் பிறங்கலில்வாழ்நம் மருட்கடறுன்
மீண்டானிருந்திடு வானேவவன்றுதி விண்மனமே. (எஉ)

கற்பனைபற்பல கோடிகொண்டொவ்வொர் கணத்துமுயர்
மற்பனைபோற் றுயர்கொண்டுகொண் டேங்கென்மடநெஞ்சமே
யற்பனைமார்க்க ளனந்தரிற்சீர்த்த வருண்மருத
வெற்பனைநாடுதி யேலெய்துமின்பம் விளம்பரிதே. (எங)

கோதுசெய்வஞ்சக் கொடுமாயையின்னங் குலையத்திற்
காதுசெய்வஞ்ச விழியார்கரங்கொளக் காட்டிடுமோ
யாதுசெய்புங்கொலென் றேங்கிடுவேற்கு ளிரங்கியெந்தப்
போதுசெய்வாயருண் மாமருதாசல புண்ணியனே. (எச)

ஆனந்தவாரிதி மேலெழுந்தார்க்கு மலையெனவே
நானந்தமின்றிநின் சீர்கோடியாக நவின்றுதியா
வானந்தமெய்திட வாஞ்சித்தனனந்த வண்ணநல்கா
தேனந்தவீண்டலைக் கின்றுபருச்சுனத் தெம்மிறையே. (எரு)

பேயென்றுமேலவர் தாம்வெறுத்தோதிய பேதையர்தோள்
வேயென்றுமங்கதைத் தோயென்றுஞ்சால விளம்பியென்னை
நோயென்றுஞ்செய்மன மேமருதேசனை நோக்கியன்பிற்
சேயென்றுரைத்தறி வாயெனின்மற்றிதைச் சீயென்பையே.

எங்கெங்குபோஞ்சனி கட்பற்றிச்சுற்றமென் றெண்ணியிகத்
தங்கங்குஞ்சென்று பொருளீட்டிமற்றவர்க் காக்கிமிகு
பங்கஞ்சுமந்து மடிவேற்குஞானம் பலித்திடுமோ
துங்கம்பொருந்து மருதாசலத்தமர் தூமணியே. (எஎ)

நசைசான்றமெ ராண்டர்க டோப்மருதாசல நாயகனின்
னிசைசான்றபத்தியில் லாரிழுமாக்கு மிகற்கலியில்
வசைசான்றவிவ்வுல கத்திருத்தற்குண் மதிக்கலனித்
தசைசான்றதுன்பப்பொறையொழித்துன்பதஞ்சார்த்தருளே.

பணமென்றுமாடென்றுங்காடென்றும்வீடென்றும்பாவைநல்லார்
மணமென்றும்பேசி யிருந்தேதசுவாச வழக்கொழியிற்
பிணமென்றெடுத்திடு காட்டிட்டழுதமை பேயர்நட்பைக்
கணமென்றும்வேண்டுகி லேன்மருதாசல காத்தருளே (எகூ)

அம்பரமோவெனுங் கண்மடவார்மிசை யாசைமிஞ்சிப்
பம்பரமோவென வோயாதுசுற்றுமென் பாவிநெஞ்சஞ்
செம்பரமோக்கம வாயுணோடோர் தினமுளதோ
வம்பரமோடணை யுங்கோபுரமரு தாசலனே. (அ0)

ஞானத்திருப்புளஞ் சாலருணேச்சுக நாதனவில்
கானத்திருப்புக ழோதியொர்சற்றுங் கசிந்துருகா
வீனத்திருப்புள வஞ்சனையுன்னடி யெய்துமன்பர்
மானத்திருப்புகண் டாப்மருதாசலம் வாழ்குகனே. (அக)

முன்னெஞ்சலின்றி யருளாடல்கோடி முயன்றதன்பர்
நன்னெஞ்சமேவிய தன்மையினுலென நன்குணர்ந்தே
னென்னெஞ்சமேவிய தன்மையினிற்கு மிரங்குகிலா
வன்னெஞ்சமாகிய தான்மருதாசல மாமணியே. (அஉ)

மதிகொண்டதொண்ட ருளத்தோடெரு மருதவெற்பிற்
குதிகொண்டதாமரைத்தாள்சிரஞ்சூட்டியென்கோதொழித்துப்
பதிகொண்டவாழ்விற்பதித்தருளாய்செழும்பங்கயந்தோய்
சுதிகொண்டநான்மறையோனுதியர்தந் தொடர்பறவே. (அங)

தேகாபிமானத் தளையுண்டநித்தசெகப்பெயர்கொண்
மோகாடவியிற் சுழல்பாவிவன்கொடு மூர்க்கனிவ
னுகாதவனமக் கென்றுளத்துன்னி யகற்றுதியே
லேகாவருட்கட லேமருதாசல யார்கதியே. (அச)

தாயாதரிக்கில ளேற்பிள்ளைக்கேதொரு சார்பதுபோ
னீயாதரிக்கிலை யேன்மருதாசல நெஞ்சயர்ந்திட்
டோயாதரிக்கும் புலனுலைப்புண் டொழிவதல்லாற்
சேயாதரிக்கும் வகையேதுநீயுட் டெரிவதிதே. (அரு)

முருகாவென்றுன்னரு ளுமைமெய்யன்பின் மொழிந்திடுவாட்
கருகாகிநீகர மீந்தாண்டருள்கை யறிந்திருந்தும்
பெருகாதரங்கொடென் பேரோதிநின்னடி பேணிலராய்
வருகாசிக்கான்மறிப் பார்மதியென்மரு தாசலனே. (அசு)

மைபுற்றவையக் கடத்தின்மின்னாரென் வனசரரென்
கையுற்றஞானப் பொருளாறலைக்கக் கலங்கிநொந்தேன்
மெய்யுற்றநின்னரு ளாந்துணை தன்னை விடுக்கிலுய்வேன்
வையுற்றவேற்படை யாய்மருதாசல வானவனே. (௮௭)

கரணத்தொடைம்பொறி யாதியுமெத்தக் கலங்கவரு
மரணத்தொடுபவ மென்றேற்றொடர்பிணி மாற்றவுன்பொற்
சரணத்துணைசர ணத்துணையாமெனச் சார்ந்தனன்பைங்
கிரணத்தொகரப் பரியூர்மருதக் கிரிக்கந்தனே. (௮௮)

வன்புளமாயை வடிவாமணமென் வசமகன்றே
துன்புளவைம்புலப் பாற்கணந்தோறுஞ் சுழற்றவெய்த்தேத
னன்புளத்தொண்டர் பெரும்பேறெனக்கென் றளித்தருள்வாய்
பொன்புணர்கஞ்சத் தடஞ்சூழ்மருதப் பொருப்பிறையே.

உலைமீதுறுமெழு கேபோலநெஞ்ச முருகிடவென்
றலைமீதுன்பொன்னடி சூட்டிமெய்த்தொண்டர்கள்சார்ந்தவின்ப
நிலைமீதமையப் புரிந்தருள்வாய் நிகரின்மருத
மலைமீதமைகுரு வேசற்றுனது மனமுவந்தே. (௯0)

தாட்டாமரைத்துணை யென்சென்னிமீதிற் சதுமுகன்கை
தீட்டாமற்சேய்கொள்ளி நாட்டாமலுள்ளஞ் சிறிதிரங்கிச்
சூட்டாமன்மெய்ந்நிலை காட்டாமலின்னமுஞ் சோதனையோ
சேட்டாமருவு மருதாசலத்தெஞ் சிவக்கொழுந்தே. (௯௧)

விரதவித்தாரமெய்த் தொண்டர்களொத்திட மேனடிக்கும்
பரதவித்தார முடையேனெனினுநின் பங்கயந்தோய்
சரதவித்தாகிய வாஞ்சையுளேன்மரு தாசலஞ்சால்
வரதவித்தாலென்னை யாட்கொள்ளநிற்கோர் வழக்குளதே.

வினைத்தடுக்குந்தடை யெல்லாந்தடுத்துனை யெய்தநெஞ்சி
னினைத்தடுத்தேனடி யேற்கருள்செய்ய நினைத்தடுக்கி
னினைத்தடுக்குந்தடை யொன்றுளதேகொ னிகழ்த்திடுவாய்
கனைத்தடுக்கும்புய ரேய்மருதாசலக் காவலனே. (௩௩)

வெதுப்புஞ்சகலத் தொடுகேவலத்தில் விழாமலுன்பொன்
மதுப்புண்டரிகத் திருத்தாளிலென்றெனை வைத்தருள்வாய்
சதுப்புந்துமாயைப் புவிவாழ்விலிச்சை தவிர்ந்தவருள்
*விதுப்புந்துசீர்மரு தாசலமேவிய வித்தகனே. (௩௪)

மின்கவின்மேனி யருட்குருவாக விளங்கியரு
ணின்கருணைத்திறஞ் சற்றேனுமன்பி னினைந்துருகா
வன்கருங்கல்லன்ன நெஞ்சகத்தேன்வயக் கும்பிழைகட்
கென்கடவேன்கழு வாய்மருதாசலத் தெம்மிறையே. (௩௫)

சும்மாவிருசொல் லறவென்றுநீமுனஞ் சொற்றலுமே
யம்மாபொருளொன் றுமறிந்திலனெ னருணையெங்கோன்
விம்மாவந்தானு பவஞ்சிறியேற்கு விளக்கிடுவாய்
கைம்மாவுலவும் பொழின்மருதாசல காரணனே. (௩௬)

* விதுப்பு - ஆசை

மலவாகக்கானடைந் திட்டேனடைக்கல மற்புரியும்
புலவேடராலரிப் புண்டேனடைக்கலம் புன்மனச்சஞ்
சலவாழ்க்கைக்குட்சலித் திட்டேனடைக்கலந் தாங்கியரு
ணலமேற்றடைக்கல நான்மருதாசல நாயகனே. (௯௭)

வள்ளிதெய்வப்பிடி நாதாவபய மணங்கமழுங்
கள்ளியனீபத் தொடையாய்பயங் கலாபவெழிற்
புள்ளிமயிற்பரி யானேயபயம் பொருதுசத்தோ
டொள்ளியவேன்மரு தேசாவபய முனதடிக்கே. (௯௮)

படைக்கலந்தாங்கிப் பொரும்வேள்சமன்றன் பகைபெரும்பார்
நடைக்கலந்தோர்புக லுங்காண்கிலதுநின் னுண்மலர்த்தாட்
கடைக்கலமாயின னுயேனைபுன்ற னருளடியார்
புடைக்கலந்தின்புறப் பார்மருதாசல போற்றியவே. (௯௯)

திசையாறுமேமுக மாய்ச்சமயங்க டிருப்புயமா
யிசைவேதவாகம நிச்சயந்தாள்க ளிரண்டெனக்கொண்
டசையாப்பரந்தண்ட மேந்துகைத்தேசிக னுருவாய்
நசைதோயடியர் தொழுமருதாசல நண்ணியதே. (௧00)

முற்றிற்று

# நூற்பயன்

## கட்டளைக் கலித்துறை

திருவருட்சற்குரு வாங்குமரேசன் றினங்குலவு
மருதவரைப்புகழ் தோயலங்கார வளப்பனுவ
லொருபதுபத்துக் கவியும்பகரு முரமுடையார்
முருகவிழ்தாமரை யான்சமன்வேள்பகை மூள்கலரே.

வேலுமயிலுந் துணை

---

உ

குருவேதுணை

# யமகவந்தாதி

## காப்பு

### கட்டளைக் கலித்துறை

மருதாசலவி யமகவந்தாதிச்சை மாற்றிமெய்க்கா
மருதாசலவி யமகவந்தாதி யெனவழுத்து
மருதாசலவி யமகவந்தாதிக்கு வாய்த்ததுணை
மருதாசலவி யமகவந்தாதிதன் மாணடியே.

## நூல்

### கட்டளைக் கலித்துறைகள்

வாரணவத்திரள் சூசுகவள்ளி மகிழ்ந்தணைவான்
வாரணவத்திர னைப்போற்றுசீர்மரு தாசலத
வாரணவத்திர மார்காயவாழ்க்கையை மாற்றுபுமூ
வாரணவத்திர நாடகத்தாளிடை வைக்குதியே. (க)

வைக்காதரமை விழியார்சொற்கொண்டு வரைதருஞ்சி
வைக்காதரமைந்த னுமருதாசலன் வண்புகழ்ச்சு
வைக்காதரமை யலின்மூழ்குமூடர்கள் வாய்ந்திடுந
வைக்காதரமைந் தினுந்தாழ்குறும்பி வழிபுழையே. (உ)

வருத்தம்பலவிதத் துங்கொண்டுமன் றிட மாசுறுமை
வருத்தம்பலமிக் கியற்றினரர்ச்சுன வள்ளனின்முன்
வருத்தம்பலநடத் தார்க்கருளுண்மை வகுத்துனுட்க
வருத்தம்பலம்பெறு மெய்த்தொண்டரிலொரு வன்னெனவே

வன்னத்தலையழுங் கார்கலிக்கப்புற மன்னிமுகில்
வன்னத்தலைவனை யாண்மருதாசல வாரிசத்தன்
வன்னத்தலைவது கண்டும்மன்னீதி மதித்துளத்தின்
வன்னத்தலைவறி துற்றுமென்செய்வன் மதியிலியே. (ச)

மதியங்கரந்தை யலர்முகமோதிகண் மாலுமென்றன்
மதியங்கரந்தை யலதின்பின்றர்ச்சுன மால்வரைமேய்
மதியங்கரந்தை யலர்வேணியன்குப வற்றுதிப்பின்
மதியங்கரந்தை யலர்திருச்சேவை வழங்குமன்றே. (ரு)

வழக்கம்பலபல வுஞ்செய்துலகின் பயங்குவிர்தி
வழக்கம்பலபல மெய்திடுங்காலநு மக்கிடர்கள்
வழக்கம்பலபல முள்ளுநன்னிப்பார்மின் மதுரரத
வழக்கம்பலபலஞ் சான்மருதாசலன் வாரிசமே. (சு)

வாரிசவாதனத் தான்கரந்தொட்டின மாயப்புலை
வாரிசவாதனப் பைபுகுத்தாதன்பின் வாழ்த்துமென்சொல்
வாரிசவாதன கப்புயந்தோய்மரு தக்கலருள்
வாரிசவாத னறுந்தமிழ்ப்பாவலர் மாதவமே. (எ)

மாதங்கவிலங் கமைகொப்பம்வீழ்ந்திடன் மானமனை
மாதங்கவிலங் கணைவார்மதியின் மதிப்பருஞ்சீர்
மாதங்கவிலங் கவினீடருச்சுனம் வாழ்த்தினமே
மாதங்கவிலங் கடைகிலமெய்தலை வம்புறமே. (அ)

வம்புத்துணர்திருக் கோவீர்மருத வரையிறைதாள்
வம்புத்துணர்திருக் கோவிலிற்கண்டிட்டு வாழ்த்திடுத
வம்புத்துணர்திருக் கோன்பேறுமேவுதிர் மாறிடில
வம்புத்துணர்திருக் கோடுறுங்கூசிட வாய்தருமே. (௯)

வாயசங்கங்கட ஞய்நரியாதிகண் மாந்திரையாய்
வாயசங்கங்கடம் புக்கிளைத்தே தன்மலர் வாவிக்கரை
வாயசங்கங்கடண் ஞர்நிலவேய்மரு தாசலகா
வாயசங்கங்கட யேன்பெறவெஞ்சலென் மாற்றம்வீண்டே. ()

மாற்றுயரம்பங்க நல்கிடும்வேள்கர வாரிசமெய்ம்
மாற்றுயரம்பங் கருதுநெஞ்சேமலர் வாழ்பிரமன்
மாற்றுயரம்பங்க ரேத்துமருத வரைக்குகன்பொன்
மாற்றுயரம்பங் கயப்பதம்பேரின்ப வான்றுணையே. (கக)

வானத்தரங்கத் திருமான்மருகன்முன் வந்தழுத
வானத்தரங்கத் திருமேவிடும்படி வைத்தகன
வானத்தரங்கத் திருக்கும்பதங்கண் மதித்திடுசு
வானத்தரங்கத் திருக்குநெஞ்சர்ச்சுன மாடடைந்தே. (கஉ)

மாடாடிரண மெனவறியாது வயக்கியிழி
மாடாடிரண மவாவுவிரர்ச்சுன மால்வரையின்
மாடாடிரணச் சிலம்படிசூடிட வாஞ்சிமின்சும்
மாடாடிரணஞ் சுமக்கவிதிவிதி மாய்ந்தறவே. (கங)

மாயாமலகந் தரநிழல்போன்று மடியுடல
மாயாமலகந் தழைத்தேகுளிகைகண் மாந்திடுவீர்
மாயாமலகந் ததைபொழிலர்ச்சுன வள்ளலினுண்
மாயாமலகந் தவிர்வீரிடுதொப்பதின் மாநிலத்தே. (கச)

மானிலத்தோடிணை யஞ்சனக்கண்ணியர் மால்பெருகி
மானிலத்தோடி யிளைத்தேனைத்தீம்புனல் வாவியிற்பூ
மானிலத்தோடிய வோடங்கிடக்கு மருதவெற்புன்
மானிலத்தோடிகழ் கிள்ளையிலாள மதித்தருளே. (கரு)

மதியாதவன்கண்ண ருங்கவிதம்மேல் வகுத்துறிற்கேண்
மதியாதவன்கண்ணை லென்றேவற்கோதி வழங்குகின்றார்
மதியாதவன்கண் ணலமேல்வருமரு தாசலதா
மதியாதவன்கண் ணருணீசெய்யாமை மரபல்லவே. (கசு)

மரகதத்தோகைத் திடத்தோநிற்கிச்சை வழுத்தெனுமம்
மரகதத்தோகைய ரேவலர்தென்றிசை வாழ்சமன்கொண்
மரகதத்தோகை கெடுவார்மருத வரைக்குகனே
மரகதத்தோகையைப் பாடுநர்க்கன்னவன் வந்தனியே. (கஎ)

வந்திக்குவந்தவொ ராளாகிமாணிக்க வாசகர்த
வந்திக்குவந்தவர் காணச்செய்தார்சூர வன்மருதம்
வந்திக்குவந்தர நோக்காதுருவழி மாரவிகல்
வந்திக்குவந்தம்பு பெய்யேலெளிதன்று வைச்சத்தியே. (௧அ)

வையத்தங்கற்பணி மின்னாக்குவந்திறு மாப்பிர்கணீர்
வையத்தங்கற்பணி தன்னையுநம்முண் மதித்திலிரோ
வையத்தங்கற்பணி யாரர்ச்சுனவரை யன்வடிவுள்
வையத்தங்கற்பணித் தொண்டருள்ளாகலம் வாஞ்சிமினே.

வாஞ்சித்தவண்ண மடியார்தமக்கு வழங்கிடவ
வாஞ்சித்தவண்ண மருதாசலத்தினை வாழ்த்திடற
வாஞ்சித்தவண்ண முதலாப்புகல்கவி மாலைகொண்டு
வாஞ்சித்தவண்ணண் ணிடுமாறருணின் மனமுவந்தே. (௨௦)

மனங்கண்டகுற்றம் புரிந்தானையுந்தயை வாய்ந்துயர்க
மனங்கண்டரிக்கும் பரிகொடியாக்கொண் மருதவெற்பாய்
மனங்கண்டனதமி ழாலுனைநாடொறும் வாழ்த்துமெனை
மனங்கண்டழைக்க வருளாமலேனின்னம் வாதிப்பதே.(௨௧)

வாதிக்குமைய்ல ருங்கொண்டவனமன் வாரிசனே
வாதிக்குமைய லியற்றநொந்தேன்குற வள்ளிகண
வாதிக்குமையருந் தாழ்மருதாசல வள்ளலொரு
வாதிக்குமைய லறப்புரியாயிரம் வந்தனமே. (௨௨)

வந்தனங்காத லடியார்செயர்ச்சுன வள்ளலேபு
வந்தனங்காதமை யப்பாடிநாடுமோர் மாண்பமைந்தேம்
வந்தனங்காதர மோராதுலகுடன் மானமிக்க
வந்தனங்காதலிப் பாரின்மதித்துந்தல் வம்பலரே. (௨௩)

வம்பலரும்பர்கொ ளரின்னர்ச்சுனப்புகழ் வாழ்த்துமென்னை
வம்பலரும்ப லனமாந்தர்யாரும் வழுத்திடக்க
வம்பலரும்ப விடாதேமடிப்பைகொன் மாமகத்து
வம்பலரும்பழிச் சப்புரிவாய்கொன் மதித்திலனே. (௨௪)

மதித்தற்கரிய மருதாசலன்புகழ் வாழ்த்துநர்வான்
மதித்தற்கரிய னடுப்பதத்தெய்துவர் மாறுகொள்புன்
மதித்தற்கரியங் கசநெறிப்பட்டலர் வாய்ந்திவண்டா
மதித்தற்கரிய நிரயங்கதியா வதிபவரே. (௨௫)

வதிமாதரங்கம வாவிடிலோர்மாத் திரையிடையு
வதிமாதரங்கணத் தாழ்த்திடுநெஞ்சே மருவமரா
வதிமாதரங்க வனம்புகுஞ்சீர்மரு தாசலன்றாள்
வதிமாதரங்க நிகரானசிற்சுக மன்னிடுமே. (௨௬)

மன்னவராகந் தசகோடிசற்றென வன்கடத்துண்
மன்னவராகந் தகையமடிந்த மதித்துமிப்பார்
மன்னவராகந் தணந்திலெநெஞ்சே மருதவெற்பின்
மன்னவராகந் தனைப்போற்றுமாறுள வாவுதியே. (௨௭)

வாவிக்கணத்து நிலையாதலர்த்தண் வனத்திடைய
வாவிக்கணத்துவண்டொத்தோடுநெஞ்சால்வருந்தியெய்த்தேன்
வாவிக்கணத்துல வுஞ்சீர்மருத வரையவென்முன்
வாவிக்கணத்துட் களிப்பான்முகினேர் மயிலென்னவே. ()

மையத்தியங்கண்டகுவியரேச மகேந்திரத்த
மையத்தியங்கண்டர் மன்மகற்கோதிய வாபுவிவான்
மையத்தியங்கண்டந் தாமரு தாசல வள்ளலுள்ள
மையத்தியங்கண் டகவோதிலென்றுயர் வான்மலரே. ()

வானத்தரம்பைய ரெய்தினுமுண்மரு ளாமலமை
வானத்தரம்பைய வென்னுதுவல்லை வழங்கிடுவாய்
வானத்தரம்பை யாவத்தனந்தலர் வந்துமகிழ்
வானத்தரம்பை யணியார்மருத வரைக்கரசே. (௩௦)

வரைக்கடங்காதுடன் புக்கிருப்பாகு மலரயன்கை
வரைக்கடங்காதலித் தெய்த்தேனடைக்கலம் வந்தருளாய்
வரைக்கடங்காதழு வாரோகணத்தில் வளர்மருத
வரைக்கடங்காதர நீபாரந்தோயகன் மார்பத்தனே. (௩௧)

மாரணஞ்சம்பவத் துக்காற்றிடாதற வாடிமங்கை
மாரணஞ்சம்பவத் தாற்பகலெல்லியை மானவரு
மாரணஞ்சம்பவத் துக்கிளைத்தேன்மரு தாசலமெய்
மாரணஞ்சம்பவ மாக்கும்வினையை மடித்தருளே. (௩௨)

மடியாணவத்திர சத்தின்பம்வேட்டு மறலியென்ன
மடியாணவத்திர மாயமின்னுரை மணம்புணர்த்து
மடியாணவத்திரத் துக்குடைந்தேனிம வான்மகளின்
மடியரணவத்திர மார்மருதாசல மாமணியே. (௩௩)

மாமணிவண்ணத் துளவகலாவகன் மார்புடைய
மாமணிவண்ணத்து மான்மருகாமரு தாசலகண்
மாமணிவண்ணத்து ளார்பாவையாகி மதியளிக்கு
மாமணிவண்ணத் துணையேத்திப்போற்ற வரமருளே. (௩௪)

வரப்பிரசாதல மட்டுங்குளிர வயக்கிடுது
வரப்பிரசாதர வாவியருண்மரு தாசலன்றன்
வரப்பிரசாதம் படைத்தமெய்த்தொண்டர்கண் மைந்தரென
வரப்பிரசாத மயில்வார்க்குமெய்தலர் வாய்மையிதே. (௩௫)

வாய்மையற்றங்கத் தினுக்கின்பிற்றுன்பம் வழங்குநர்கண்
வாய்மையற்றங்கத் திகைப்பீரிப்புன்மதி மாற்றியங்கா
வாய்மையற்றங்கத் திரிமருதேதய்மின்முன் மாமகத்தில்
வாய்மையற்றங்கத் திடவூர்ந்தகாதை மனத்தமைத்தே. (௩௬)

மனக்குரங்கோட்ட மிகுத்தைம்புலத்தின் மருவுபுக
மனக்குரங்கோட்டகு நீர்போன்றுலகின் மயக்கிலதன்
மனக்குரங்கோட்ட மதியேன்பெற்றுய்ய வழங்கியென்று
மனக்குரங்கோட்டத் தணிமருதாசல மாணிக்கமே. (௩௭)

மாணிக்கவாசகந் தேறத்தந்தொப்பின் மதுரமலி
மாணிக்கவாசகர் போற்றநின்றாற்கு மறைகொள்பிர
மாணிக்கவாசகஞ் சொற்றான்மருத வரையடையின்
மாணிக்கவாசக கணையோடுமென்முனி மத்தையொத்தே. ()

மத்தம்புயங்க மணிவார்நுதற்கண்ணின் மாய்ந்தவன்கா
மத்தம்புயங்கச் செயத்தளர்ந்தேன்வள்ளி மான்புணர்சே
மத்தம்புயங்களி லென்பாடலேற்றெனை வாட்டுசர
மத்தம்புயங்களிற் சேர்ப்பாய்மருத மலைக்கரசே. (௩௯)

மலையவசந்தத் துலாவரும்வேடன் மலர்க்கணையான்
மலையவசந்தத் துறுவாருணர்வரு மாமருத
மலையவசந்தத் துணைப்போற்றுமேன்மை வழங்கியென்று
மலையவசந்தத்து வங்கழன்றின்புற வைத்தருளே. (௪௦)

வைத்தவுடம்பிடிக் கையான்மருத வரையைநெஞ்சுள்
வைத்தவுடம்பிடித் தேவறியார்க்கு மனையிடைக்கு
வைத்தவுடம்பிடி நல்காருயிரைந மன்கொடுந
வைத்தவுடம்பிடி காலத்திலென்னை வயக்குவரே. (௪௧)

வயப்பட்டரைக்கண நில்லாமலோடுபு மங்கையர
வயப்பட்டரைக்கண வாய்ச்சிற்சுகங்கொள் வகையறியா
வயப்பட்டரைக்கண மானினைத்தேமரு தாசலன
வயப்பட்டரைக்கணஞ் சேர்ந்தாடிப்பாடி மகிழ்மனமே. (௪௨)

மகிழ்ந்துணரணி வேடன்கிருபை வழங்குவதே
மகிழ்ந்துணரணி மெய்க்குயிர்க்குத்தம்ப வாய்ப்புவியோ
மகிழ்ந்துணரணித் தண்டலையர்ச்சுன வள்ளறரன்
மகிழ்ந்துணரணி யார்தன்னதொப்பில் வடிவமன்றே. (௪௩)

வடிவேற்றிகழுங் கரமருதாசல மாரனெஞ்சும்
வடிவேற்றிகழுங் கரமார்பவள மலைபுரைநின்
வடிவேற்றிகழுங் கரவரையுங்கவின் மாதர்தம்மை
வடிவேற்றிகழுங் கரங்கொடுமாற்றவ வாவினனே. (௪௪)

வாரிக்கரையன் றடும்விழிப்பாலக வந்துபொரும்
வாரிக்கரையன் றடுமாறச்செய்மரு தேசவற்ற
வாரிக்கரையன் றடுமிடயானெதிர் வந்துகையால்
வாரிக்கரையன் றடுத்தோதுமாற்றம் வளம்படவே. (௪௫)

வளக்கடத்தந்தினைக் காவல்செய்வாடன் வனமுலைப
வளக்கடத்தந்திட வேட்டுளத்தன்பின் மலைநிகர்க
வளக்கடத்தந்தி முகற்போற்றருச்சுன வள்ளன்மெய்து
வளக்கடத்தந்திய மேயாதுன்பாத மனையருளே. (௪௬)

மனைமாதரங்கத் தினைவாணிழலினை மானவகன்
மனைமாதரங்கத் திருவைத்துணையா மதித்தனெஞ்சே
மனைமாதரங்கத் தினில்வாழ்தடமரு தத்தனியின்
மனைமாதரங்கத் திருத்தாடுணையுன் மலங்கெடவே. (௪௭)

மலங்கப்புரிமை யமைத்தேயெண்ணற்றசென் மங்கடந்து
மலங்கப்புரிந்தெனை யோர்மாத்திரையும் வழாப்பிணிப்பார்
மலங்கப்புரியட்ட கங்கெடுத்துன்றாண் மருவவைப்பாய்
மலங்கப்புரிமைத் தடமருதாசல வானவனே. (சஅ)

வானவரம்பன் றகச்செய்பழநி மலைக்குகநீள்
வானவரம்பன் றதினீடருச்சுன மால்வரையில்
வானவரம்பன் றளியினிற்போற்றென்முன் வந்திலகாய்
வானவரம்பன் றழித்தான்வடிவ மயிலிவர்ந்தே. (சகூ)

மயிலைமகத்து வருமையையூர்மரு தக்கிரியாய்
மயிலைமகத்துவப் பாவையெழச்செய் மறையவகான்
மயிலைமகத்து வயமார்பில்வேய்ந்தருள் வள்ளலெற்றா
மயிலைமகத்துவஞ் செய்யாதருடுணை மற்றிலனே. (ருo)

மற்றில்லையின்றுணை யென்றேமதித்து மருண்டவமே
மற்றில்லையின்றுணை வார்சீர்ப்பினுமவர் வாழ்க்கைபல
மற்றில்லையின்றுணை தேர்நாடகர்க்கு வகுத்தசொல்லாய்
மற்றில்லையின்றுணை தீர்மருதாசல வல்லவனே. (ருக)

வல்லாளமன்னன் சிகரியினுங்குதி மாதவனை
வல்லாளமன்னன் றெதிர்ந்தாய்முருகநா மம்வழுத்தும்
வல்லாளமன்னன் கரமீந்தனைமரு தாசலந்தோய்
வல்லாளமன்னன் படியேற்கருள வருவதென்றே. (ருஉ)

வருமந்தணந்தடி யேற்குமுன்றூன வரொடுபண்ண
வருமந்தணந்தரத் தோன்றமுதத்தினு மாண்டுளங்க
வருமந்தணந்தந் தருள்செய்யவேண்டும் வனசமிசை
வருமந்தணந்தவிர் வாவித்தடமரு தாசலனே. (௫௩)

தாசத்துவம்பொலிந் துன்மெய்த்திருப்புகழ் சாற்றிடச்ச
தாசத்துவம்பொருந் தக்கணியாய்மரு தாசலசித்
தாசத்துவம்பொழி யாரீபகூதளத் தாரமெய்க்கந்
தாசத்துவம்பொளிர் கொங்கைப்பிடிவள்ளித்தாரத்தனே.

தாரகன்மாரண மெய்தச் செய்சத்தி தயங்குவெட்சித்
தாரகன்மாரண வீரப்புயமரு தாசலவு
தாரகன்மாரண வேடக்கொடிசுரர் தம்பிடியாந்
தாரகன்மாரணநெஞ்சுடன்மாய்த்தெனைத்தாங்கிக்கொள்ளே.

தாங்கற்கரிய துயர்கோடிநல்கித் தரணிவிண்ணந்
தாங்கற்கரிய மனத்தினேனேன்மரு தாசலநீ
தாங்கற்கரியவ னன்னக்கொடியன்முற் சாற்றமரார்
தாங்கற்கரியமெஞ் ஞானேபதேசத்தைத் தந்தெனையே. ()

தந்தத்தனத்தன வென்றுன்றிருப்புகழ் சாற்றுபுவி
தந்தத்தனத்தரு ளோமொழிவேட்குந் தாத்தனிவி
தந்தத்தனத்தமெய் தப்பார்க்குநீர்மை தகுதிகொல்கு
தந்தத்தனத்தமை வேலையிற்போழ்மரு தாசலனே. (௫௭)

தாக்காதிருக்க வியன்முடியாய்கவி தப்பினர்ச்ச
தாக்காதிருக்கவி டாதரிங்கோனகஞ் சஞ்சலிக்கத்
தாக்காதிருக்கவிக் கிள்ளைகொடோண்மரு தாசலத்தோப்
தாக்காதிருக்கவி ஞானத்தைதநின்பதஞ் சாரச்செய்தே. (ருஅ)

சாரத்திருப்புகழ் பல்லாயிரநின் றடம்புயத்தா
சாரத்திறப்புற வோதிடுமிச்சை தழைப்பணிவி
சாரத்திருப்புறழ் வாழ்க்கையுள்வாடிய சாலுமுண்மை
சாரத்திருப்புகண் டாய்மருதேச தயைசெய்தின்றே. (ருகூ)

தயங்கமலத்தியங் கூடலிற்கூம்புபு சாம்புமென்னி
தயங்கமலத்தி யலர்ப்பாணம்பாயத் தளர்ந்ததென்று
தயங்கமலத்தியங் கற்குன்றெறிசனந் தந்தருளாய்
தயங்கமலத்தி யனவாவியர்ச்சுன சைலத்தனே. (கூ0)

சயிலங்கமலை யெனக்கான்றன்மாந்துதுத் தத்தவரிச்
சயிலங்கமலை மடவாருறவு தணந்திசையிற்
சயிலங்கமலை கமழ்மருதாசலஞ் சார்ந்தருள்வாஞ்
சயிலங்கமலை வறநின்றிருப்புகழ் சாற்றவையே. (கூக)

சாற்றுந்தமிழ்க்கவி ரைக்கலைவாரைத் தணந்துளன்பிற்
சாற்றுந்தமிழ்க்கவி மெய்யடியாரிடை சார்த்தணியார்
சாற்றுந்தமிழ்க்கவி ஞேக்கியின்பெய்திடத் தந்தருள்வீர்
சாற்றுந்தமிழ்க்கவி தண்டலையார்மரு தாசலரே. (கூஉ)

தாக்கணங்காற்ற வருளாமையினிச் சகத்தினிடை
தாக்கணங்காற்றளர் வுற்றேன்குககதிர் தாங்குசவி
தாக்கணங்காற்றளிக் கும்பொழிலார்மரு தாசலந்தோய்
தாக்கணங்காற்ற லருளித்திதிசெய் ததியுகந்தே. (௬௩)

ததிதித்தித்திட்டதென் றுண்டான்புகழ்மரு தாசலகந்
ததிதித்தித்திட்ட மளித்தருளாலெனைத் தாங்கியிது
ததிதித்தித்திட்ட ருடன்கூட்டியாண்மெய்த் தகையருளு
ததிதித்தித்திட்ட ருறவினிச்சற்றுஞ் சகிக்கிலனே. (௬௪)

சகித்தற்கரிய துயர்கோடிகொண்டு தவநெறிபி
சகித்தற்கரிய வழிப்பட்டுழன்றேன் றவமனைத்துஞ்
சகித்தற்கரியவ னைத்தியல்பேறரு டந்தியைவ
சகித்தற்கரிய குறமாதைத்தோய்மரு தாசலனே. (௬௫)

தாசலசத்தவி ருங்கடலொத்தெதிர் தானவர
தாசலசத்த விருகமொப்பே னுமெய் தங்குமரு
தாசலசத்த விருகண்ணினிற்றரி சித்தனன்கந்
தாசலசத்தவி ரும்பிரமன்விதி தானறவே. (௬௬)

தானவரத வடிவேற்கரவிசா காகுககந்
தானவரத வடிவாரெழின்மரு தாசலவந்
தானவரத வடித்தமிழாலுனைச் சாற்றமலைத
தானவரத வடியேற்கருணின் சரண்சரணே. (௬௭)

சரணம்பரவியன் மாமுகடார்மரு தாசலவா
சரணம்பரவியன் மாமிசபிண்டந் தணந்துநின்பொற்
சரணம்பரவியன் மாதவமேனிலை தாங்கிடுதா
சரணம்பரவியன் மாட்சிப்பெருவெளி தங்கவையே. (௬௮)

தங்கத்திருப்பது மைக்கிணைமாதர்ச் சதமெனம
தங்கத்திருப்பது போலுநெஞ்சேர்மெய்த் தகையினர்மூர்த்
தங்கத்திருப்பது போவதுமெய்யெனச் சாற்றலுன்னித்
தங்கத்திருப்பது மந்தாவென்றர்ச்சுனற் றூழுமினே. (௬௯)

தாழ்த்துங்கடியமா யாமலயாக்கைத் தளையமைந்து
தாழ்ந்துங்கடிபட் டிருத்தனன்றன்றுநந் தம்மனத்தே
தாழ்த்துங்கபத்தி கொடுமருதாசலஞ் சார்ந்திறைக்குள்
தாழ்ந்துங்கடிப்பிய மெய்ச்சுகமென்று ததைகுவிரே. (௭௦)

தத்தைக்களிக்குந்து மாரன்றுறையிடை தாழ்பியமா
தத்தைக்களிக்குந் தகையாக்கவேண்டுவிர் சந்தவிசைத்
தத்தைக்களிக்கும் புயத்தான்மெய்யன்பருட் சாருமினோ
தத்தைக்களிக்குந் தினிமைத்தடப்பூ தவக்கலுற்றே. (௭௧)

தவத்திருக்கோவறச் செய்மாயவாழ்வுட் சலித்துமனந்
தவத்திருக்கோத மெனநீர்வடித்துத் தயங்குவிர்மெய்த்
தவத்திருக்கோசிக னன்னார்புகழ்மரு தாசலனு
தவத்திருக்கோயில்கொண் டுள்ளானறிந்தைதிற் சாருமினே

சாரத்தியம்ப ரடளவென்றுட்படர் தாணைசுற்றச்
சாரத்தியப்பவ னன்செலுத்தச்சென்று சற்றுமுள்ளஞ்
சாரத்தியம்படி வந்தொலைத்தாண்மரு தாசலமெய்ச்
சாரத்தியம்பன் சயந்தனுக்கோதுந் தகைமைபொத்தே. ()

தகைக்கும்படிற்று மலத்தான்மிகவுட் டயங்குவன்சீ
தகைக்கும்படியில் புனற்சுணைபாமரு தாசலகந்
தகைக்கும்படிசெய் பிழையையெண்ணுதுநின் றுடொழுமே
தகைக்கும்படியருட் சேர்த்துய்புமாறு தயவுசெய்யே. (௭௪)

தயவாழியென்று மருதாசலத்துத் தவருளத்து
தயவாழியென்று நிகர்மேனிகொண்டு தயங்குமென்னி
தயவாழியென்று தினநின்புகழ்மிகச் சாற்றுவன்க
தயவாழியென்று திருவருட்பேறு தருகுவையே. (௭௫)

தருக்கவியாக ரணமாதிகற்றுச் சமர்செய்வர்தீர்த்
தருக்கவியாக ரணமீகுநரைத் தவிர்த்துவிண்ணத்
தருக்கவியாக ரணம்புரிசீர்மரு தாசலவெந்
தருக்கவியாக ரணப்புனிதத்தவர்ச் சாரவையே. (௭௬)

சாரங்கமங்கையர் தோய்மருதாசல சற்குருவே
சாரங்கமங்கை யணையாமுன்மன்றற் சரோசதவி
சாரங்கமங்கை யமைவார்செவியிடஞ் சாற்றுமறைச்
சாரங்கமங்கை யருளியகற்றென்புன் சம்பவமே. (௭௭)

